# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 விலை 1 அணா இலங்கையில் 10 சதம் (விமானத் தபால்)

மலர் 13] சென்னை 10-9-56, துன்முகி ஆவணி—திங்கள் 26 (வெளியூர் 11-9-56 ஆவணி—செவ்வாய் 27) [இதழ் 26


### படித்த வேலையில்லாதார் ஐந்தரை லட்சம் பேர்

புதுடெல்லி, செப். 8—

1955-ம் வருட இறுதிவரையில் இந்தியாவில் இருந்த படித்த வேலையில்லாதார் தொகை 5½ லட்சம் எனவும், இதில் 2 லட்சத்து 26 ஆயிரம் பேர் பட்டதாரிகள் என்றும் திட்டக்கமிஷன் நிர்ணயித்திருப்பதாக திரு. மிச்ரா லோக சபையில் கூறினர்.

### கோவணம் கட்டுங்கள்! மந்திரிக்கு வேண்டுகோள்

புதுடெல்லி, செப் 8—

மக்கள் துணி உபயோகிப்பதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று விழையும் நிதி மந்திரி, டி டி. கே. கோவணமணிந்து முன் உதாரணமாகத் திகழட்டும் என்று துணி வரியை எதிர்த்துப் பேசிய திரு. எஸ். என் மஹந்தி ராஜ்ய சபையில் கூறினர்.

# மேல் நாடுகள் திட்டத்தை நாசர் நிராகரித்தார்

## கெய்ரோ பேச்சு வார்த்தைகள் தோல்வி

### நிலைமை மிகமிக கவலையளிக்கிறது —மென்சிஸ்

கெய்ரோ, செப். 9—

சூயஸ் நெருக்கடி சம்பந்தமாக மென்சிஸ் தூது கோஷ்டியினர் கெய்ரோவில் நடத்திவந்த பேச்சுவார்த்தைகள் தோல்வி அடைந்துவிட்டன. 18 தேசங்களின் திட்டத்தை எகிப்து அதிபர் நிராகரித்துவிட்டார்.

ஐவர் தூதுகோஷ்டித் தலைவரான மென்சிஸுக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் நாஸர் இதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

"சூயஸ் கால்வாயை சர்வதேச பரிபாலனத்திற்குட்படுத்தக் கோரும் இந்தத் திட்டத்தைப் போல் எகிப்திய மக்களை ஆத்திரமூட்டக்கூடியது வேறெதுவுமில்லை என்று இந்தக் கடிதத்தில் அவர் குறிப்பிட்டுள்ளார்.

அதோடு, இந்தத் திட்டத்தைப் பாரபட்சமின்றி பரிசீலனை செய்யும் எவரும், எகிப்தியர் கையிலிருந்து சூயஸ் கால்வாயை எடுத்து, வேறொருவர் கையில் கொடுப்பதுதான் இதன் நோக்கம் என்ற முடிவுக்கு வராமலிருக்க மாட்டார்கள் என்று எகிப்து அதிபர் தமது கடிதத்தில் சுட்டிக் காட்டியுள்ளார்."

நாஸர் தமது கடிதத்தில் மேலும் கூறியுள்ளதாவது:—

"இந்தத் திட்டம் பிரச்னையைத் தீர்ப்பதற்குப் பதிலாக, மேற்கொண்டு மனவேற்றுமையையும், அவநம்பிக்கையையும் சிருஷ்டித்துள்ளது. இங்கிலையில், எகிப்திய சர்க்காரின் திட்டமானக் கொள்கையைத் தெளிவாக்கிவிட விரும்புகிறேன். சூயஸ் கால்வாய் வழியாக சர்வதேசக் கப்பல் போக்குவரத்து எவ்விதப் பாகுபாடும், குந்தகமுமின்றி நடக்க உத்திரவாதம் கொடுக்க நாங்கள் தயார்." இவ்விதம் நாஸர் தமது கடிதத்தை முடித்துள்ளார்.

#### மிக மிக நெருக்கடி

கெய்ரோ, செப். 9—

கெய்ரோவிலிருந்து புறப்படுவதற்கு முன்னர் கடைசி முறையாக மென்சிஸ் கோஷ்டியினர் நாஸரைச் சந்தித்து 25 நிமிட நேரம் பேசிக்கொண்டிருந்தனர்.

இந்தப் பேச்சு வார்த்தைகள் முடிந்து மென்சிஸ் வெளியில் வரும்போது, 'நிலைமை மிகமிக கவலையளிப்பதாக உள்ளது' என்று கூறினர். இதற்கு மேல் அவர் அபிப்பிராயம்கூற மறுத்துவிட்டார்.

#### ஐ. நா. செல்ல ஆதரவு

லண்டன், செப். 9—

சூயஸ் பிரச்னையை ஐ. நா. சபைக்கு எடுத்துச் செல்லும் யோசனைக்கு பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய தேசங்களில் பேராதரவு ஏற்பட்டுள்ளது. பிரிட்டிஷ் தொழிற்கட்சி முக்கியமாக இதைத் தீவிரமாக ஆதரிக்கிறது. ஆரம்பத்தில், ஐ. நா. சபைக்கு சூயஸ் விவகாரத்தைக் கொண்டு செல்லுவதை எதிர்த்தக் கன்சர்வேடிவ்கள் கூட தற்போது இந்த யோசனை குறித்து சிந்திக்க ஆரம்பித்துள்ளனர்.

#### இஸ்ரேலில் பிரிட்டிஷ் படைகள்

கெய்ரோ, செப். 9—

எகிப்துக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடுத்துவதற்காக, பிரிட்டிஷ் துருப்புகள் இஸ்ரேல் நாட்டில் இறக்கப்பட்டுள்ளதாக இன்று எகிப்திய பத்திரிகைகள் எழுதியுள்ளன. அதோடு இஸ்

(2-ம் பக்கம் பார்க்க)

## பி. அண்டு சி. மில் சமரசம்

### இரவு டீ, ரொட்டி இலவசம்

#### மூன்ருவது ஷிப்டுக்கு சம்மதம்

சென்னை, செப். 10—

பக்கிங்காம் கர்நாடிக் மில்களில் சி- ஷிப்டை தொழிலாளர்கள் ஒப்புக் கொள்ளாவிட்டால், 10-9-56 முதல் மில்லை மூடப் போவதாக மில் நிர்வாகம் நோட்டீஸ் போட்டதின் பேரில், மில் நிர்வாகிகளுக்கும் சென்னை தொழிலாளர் சங்கத் தலைவர்களுக்கு மிடையே தொழில் கமிஷனர் ஸ்ரீ பாலசுந்தரம் முன்னிலையில் 9-9-56-ல் பேச்சு வார்த்தைகள் நடந்தன. இறுதியாக ஓர் சமரசம் ஏற்பட்டு, மில் கதவடைப்பு தவிர்க்கப்பட்டது.

சமரசம்

மூன்ருவது ஷிப்ட் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு டீயும் ரொட்டியும் இலவசமாக வழங்குவதற்கு மில் நிர்வாகம் ஒப்புக் கொண்டது.

2-வது ஷிப்டில் (மாலை 3 முதல் இரவு 11 மணி) இரவு வேலை செய்பவர்களுக்கு இரவு அலவன்ஸ் 12½ சதவிகிதம் கூடுதலாகத் தர வேண்டுமென்று சங்கத் தலைவர்கள் கேட்டுள்ளார்கள். அதன்பேரில் இன்று (10-9-56) பேச்சுவார்த்தைகள் நடக்கும்.

அறிவிப்பு

மேற்படி விஷயம் 9-9-56 மாலையில் தொழிலாளர் சங்கத்தில் நடந்த நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்திலும், பக்கிங்ஹாம் மில் ஸ்பின்னிங், கார்டிங், கர்நாடிக் மில் கார்டிங் இலாகா தொழிலாளர் கூட்டங்களிலும் அறிவிக்கப்பட்டது.

அன்று இரவு 8 மணிக்கு திரு. வி. க. திடலில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை நிர்வாகக் கமிட்டியின் யோசனைகளைத் தெரிவித்தார். கரகோஷம்செய்து தொழிலாளர்கள் சம்மதம் தெரிவித்தார்கள். 3 ஷிப்டுகள் வருவதால், இப்போது வேலை செய்யக்கூடியவர்களுக்கு எக்காரணத்தைக் கொண்டும் இன்றுள்ள மொத்த வருமானத்தில் எவ்விதக் குறைவும் ஏற்படக்கூடாதென்றும், தெரிவித்தார். நீதிபதி ராமசாமிக்கவுண்டர் முன்னிலையில், கிராஜுவிடி கோரிக்கை வெற்றிபெற்றிருப்பதையும் குறிப்பிட்டார். (ந, நி.)

* * *

1955ம் வருடத்தில் பி. அண்டு சி. துணி விற்பனை ரூ. 9 கோடி. நிகரலாபம் ரூ. 1 கோடி 10 லட்சத்து 63 ஆயிரம். தொழிலாளர்கட்கு மிகக் குறைந்த போனஸ் சுமார் தலா 2½ மாதம் கிடைத்தது. பி. அண்டு சி.யில் உள்ள ஊசிகள் 1,20,356. தறி

(2-ம் பக்கம் பார்க்க)

# விலைவாசிகள் ஏறுமுகம்

## உற்பத்தி அதிகரிப்பு நிதி நிலை ஸ்திரம்

### ரிசர்வ் பாங்கு வருடாந்திர அறிக்கை

புதுடெல்லி, செப். 9—

விலைவாசிகள் தொடர்ச்சியாக ஏறுமுகத்தில் செல்கின்றன. பணசப்ளை விரிவடைந்து வருகிறது, அபிவிருத்தித் திட்டங்களுக்கான செலவுகள் அதிகரித்துள்ளன, தொழிற்சாலைப் பண்டங்கள் உற்பத்தி உயர்ந்திருக்கிறது. சர்க்கார் கடன் வாங்கும் வேலையில் வெற்றி கண்டிருக்கிறது. முதலீடு மார்க்கெட்டில் கலக்கமற்ற நிலை – இவைதான் இந்தியப் பொருளாதாரத்தின் பிரதான அம்சங்களாகக் காட்சியளிப்பதாக 1956 ஜூன் 30-ந் தேதியுடன் முடிவடையும் ஓராண்டு அறிக்கையை சமர்ப்பித்துள்ள ரிசர்வ் பாங்க் அறிக்கை குறிப்பிடுகிறது.

இந்தியா கணிசமான அளவுக்கு தனது பொருளாதார அபிவிருத்தியையும், நிதி நிலைமையின் ஸ்திரத் தன்மையையும் இணைத்துக் காண முடிந்திருக்கிறது எனவும் இவ்வறிக்கை குறிப்பிடுகிறது.

அதே சமயத்தில் இன்றுள்ள பொருளாதார நிலைமையை மிக கவனத்துடனும் தொடர்ச்சியாகவும் பார்த்து வர வேண்டும் எனவும், காலத்திற்குக் காலம் திட்டமிட்ட அபிவிருத்தியின் வேகத்தையும் வடிவத்தையும் பற்றியும், வரி, நிதி சம்பந்தமான கொள்கைகளைப் பற்றியும் தகுந்ததான முறையில் நெளிவு சுளுவாக நிர்ணயித்துக் கொள்ள வேண்டும் எனவும் அவ்வறிக்கை குறிப்பிடுகிறது.

கடந்த ஐந்தாண்டுகளில் தேசிய வருமானத்தில் 18 சதவிகிதம் அதிகரித்திருப்பது பிரதான பொருளாதார சாதனை என்றும் சென்ற ஆண்டில் 10 சதவிகிதம் வீழ்ச்சியடைந்த பண்டங்களின் மொத்த விலைவாசி இவ்வருடத்தில் 16·7 சதவிகிதம் ஏறியிருப்பதையும் அறிக்கை சுட்டிக் காட்டியுள்ளது. ஏற்றுமதி குறைந்து இறக்குமதி அதிகரிப்பால் ரூ. 20 கோடி வரை நம் நாட்டிலிருந்து வெளியே செல்லும் பணம் அதிகரித்திருப்பதையும், இது ஏற்றுமதி வர்த்தகத்தை அதிகப்படுத்த வேண்டுவதன் அவசியத்தை வலியுறுத்திக் காட்டுகிறது முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சர்க்கார் துறை, தனியார் துறை இரண்டிலுமாகப் பொருளாதார அபிவிருத்திக்காகப் போடப்பட்ட மூலதனம் ரூ. 3100 கோடி 2-வது திட்டத்தில் இது ரூ. 6200 கோடியாக அதிகரிக்கும் என்று அறிக்கை கூறுகிறது.

### தடுப்புக்காவல் சட்டத்துக்கு திருத்தம்

#### தோழர் பாசுவின் மசோதா

புதுடெல்லி, செப். 7—

தடுப்புக் காவல் சட்டத்தைத் திருத்தவேண்டு மென்று, கம்யூனிஸ்ட் அங்கத்தினர் தோழர் கே. கே. பாசு, மேலும் ஒரு மசோதாவை இன்று லோக சபையில் பிரேரேபித்துள்ளார்.

ஒரு அன்னியனையோ, அல்லது ஒரு அன்னிய சர்க்காரின் ஏஜண்டையோ, அல்லது ஒரு அன்னிய ஸ்தாபனத்தின் ஏஜெண்டையோ மட்டும்தான் விசாரணையில்லாமல் காவலில் வைக்கலாம், என்று அத்திருத்த மசோதாவில் கூறப்பட்டுள்ளது.

மேலும், ஒரு பாதுகாப்புக் கைதி, சர்க்காருக்கு விண்ணப்பித்துக் கொள்ளவும், ஆலோசனை போர்டுக்கு முன்னால் வழக்கை வாதாடவும் தனக்கிஷ்டமான வக்கீலை ஏற்படுத்திக் கொள்ளவும் அனுமதி கொடுக்கவும், இம் மசோதா கோருகிறது.

# மன்னர்களின் மானியத்துக்கு வருமான வரி போடுக

## லோகசபையில் கம்யூனிஸ்ட் மெம்பர் பிரேரணை

புதுடில்லி, செப். 9—

இந்தியாவின் மாஜி மன்னர்களுக்குக் கொடுக்கப்படும் மானியத் தொகைகளுக்கும் வருமான வரி போடுவதை அனுமதிக்கும் முறையில் இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு ஒரு உத்யோகப்பற்றற்ற மசோதாவை கம்யூனிஸ்ட் அங்கத்தினர் தோழர் கே. கே. பாசு இன்று லோகசபையில் பிரேரேபணை செய்தார்.

மேலும், பழைய ஐ. ஸி. எஸ். காரர்களுக்கு அவர்களின் சம்பளங்கள் சம்பந்தமாக இன்றைய அரசியல் சட்டத்தில் உள்ள உத்திரவாதங்களையும் ரத்து செய்ய வேண்டுமென்றும் மேற்படி மசோதா கோருகிறது.

### பஞ்சாலை பிரதிநிதிகள் கூட்டம்

கோவை, செப். 9—

8, 9, தேதிகளில் ஏ. நல்லசிவம் தலைமையில் நடைபெற்றது. பல பாகங்களிலிருந்து 40 பிரதிநிதிகள் வந்திருந்தனர். பஞ்சாலை பேச்சு வார்த்தைகளை யொட்டிய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. (தீர்மானம் நாளை வெளிவரும்)

மாலை காந்தி சவுக்கில் ஆறுமுக முதலியார் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் என். கே. கிருஷ்ணன், கே. டி. கே. தங்கமணி, ஆர். உமாநாத ராவ் முடிவுகளை விளக்கினர்.

# தியாகிகள் தினம்

## ஆமதாபாத்தில் ஒரு லட்சம் பேர் அணிவகுப்பு நடத்தினர்

ஆமதாபாத், செப். 8—

ஆமதாபாத நகரிலும் இன்னும் பல நகரங்கள் கிராமங்கள் இவற்றிலும் தியாகிகள் தினம் அனுஷ்டிக்கப்பட்டது. இருமொழி ராஜ்யத் திணிப்பை எதிர்த்து இடைவிடாது போராடி துப்பாக்கி குண்டுக்கு இரையான தியாகிகளின் அமர நாமங்களுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

ஆமதாபாத் நகரில் இந்தக் கூட்டத்திற்கு ஒருலட்சம் பேர்களுக்கு மேல் திரண்டு வந்தார்கள். ஜனநாயக விரோதமாகத் திணிக்கப்பட்ட இருமொழி ராஜ்ய அமைப்பு வாபஸ் பெறப்பட்டு, மஹா குஜராத் ராஜ்யம் அமையும் வரையில் ஓய்வும் ஒழிதலும் இன்றி இடையருது போராடுவோம் என்று பிரதிக்ஞை செய்து பலர் பேசினர்கள்.

நகரிலுள்ள நூற்றுக்கு மேற்பட்ட பிரமுகர்கள் கூடி மஹா குஜராத் ஜன பரிஷத் என்ற ஸ்தாபனத்தை நிறுவி மொழிவாரி ராஜ்யத்திற்காகக் கிளர்ச்சி செய்யும் சகல பகுதிகளையும் இணைப்பதற்கு ஏற்பாடுகள் செய்து வருகிருர்கள்.

**ஜனசக்தி**
தினஇதழ்
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

ஆசிரியர் குழு :
எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராமமூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன், கே. முத்தையா நிர்வாகஆசிரியர்.

திங்கள் 10—9—56

# பாரதி விழா

நாம் வளரும் தோறும், "பாட்டுக்கு ஒரு புலவன்" பாரதியின் பெருமையும் வளரும். சாகாவரம் பெற்ற பாரதியின் இலக்கியப் படையல்கள் தமிழ் மக்களிடம் பரவும் தோறும், பாரதி விழாவின் பெருமையும் வளரும்.

இந்த ஆண்டுப், பாரதி விழா இதுவரை நடந்த விழாக்களை விட அமர்க்களப்படும்; படவேண்டும். ஏனென்றால் இந்த ஆண்டில் தான் உயிரொளி வீசும் பாரதியின் புனிதக் கனவான, தமிழ்நாடு—தமிழரசு நவம்பர் முதல் நாளில் நனவாகப் போகிறது.

தமிழரசின் ஜீவநாடி என்ன? தமிழ் ஆட்சிமொழி ஆக வேண்டும் என்பது.

தமிழ் ஆட்சிமொழியானல், 3 கோடித் தமிழ் மக்களின் அரசியல் தரம் என்றுமில்லாதவாறு உயரும், ஐயமில்லை.

தமிழ் ஆட்சிமொழியானல், சட்டமன்றத்தில் தமிழ் முழங்கும், சர்க்கார் நிர்வாகத்தில் தமிழ் முழங்கும், நீதிமன்றத்தில் தமிழ் முழங்கும், தமிழக முழுவதிலும் தமிழ்மொழி முதன் மொழியாக சகல துறைகளிலும் வரிசையுடன் முழங்கும். இந்தச் சீரிய சூழ்நிலை, கல்லூரிப் பயிற்சியிலும், விஞ்ஞானப் பயிற்சியிலும் சரி, தொழில் நுணுக்கப் பயிற்சியிலும் சரி, தமிழே வலிய முழங்கும் வாய்ப்பளிக்கும்.

தமிழ் ஆட்சிமொழியானல், 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கும்.' ஜன நாயகம் தங்கு தடையின்றித் தழைக்கும்.

தமிழ்நாட்டு 'அரசியல்வாதி'களிடையிலும் 'அறிவாளி'களிடையிலும் அண்மையில் ஆங்கில மோகம் அதிகரித்திருக்கிறது. ஆங்கிலம் கட்டாய மொழியாகக் கல்லூரிகளில் மட்டுமல்ல, கலாசாலைகளிலும் கற்றுக் கொடுக்க வேண்டுமாம். விஞ்ஞானக் கல்வியும் தொழில் நுணுக்கக் கல்வியும் ஆங்கிலத்திலேயே கற்றுக் கொடுக்க வேண்டுமாம். ஆங்கிலம் இன்றேல், தமிழர் வாழ்வு உலகில் உயராதாம்.

எல்லாப் படிப்பிலும் ஆங்கிலம் கட்டாய பாடம் ஆக வேண்டுமென்று வேட்கை கொண்டால், தமிழ் ஆட்சி மொழி ஆவது எப்படி?

பாரதி, வள்ளுவன் தமிழை, கம்பன் தமிழை, தன்னைத் தாலாட்டிச் சீராட்டி வளர்த்த தமிழை, "வானம் அளந்ததனைத்தும் அளந்திடும், வண்மொழி" என்றும் "வானம் அறிந்ததனைத்தும் அறிந்து வளர்மொழி" என்றும் கண்டான். தமிழன் பால் தனக்குள்ள அன்பையும் நம்பிக்கையும் காட்டி "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்று பாடினன்.

"புத்தம் புதிய கலைகள் —பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்
[கள் கூறும்;
மெத்த வளருது மேற்கே
[—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில்
[இல்லை.
சென்றிடுவீரெட்டுத்திக்கும்
[—கலைச்
செல்வங்கள் யாவுங்
கொணர்ந் திங்கு சேர்ப்பீர்!"

என்று தமிழ்ப்பேரன்பால் தமிழர்களுக்கு ஆணையிட்டான்.

எதையும் தமிழில் ஆக்க முடியும் என்ற தமிழின் பேராற்றலை அன்றே பாரதி கண்டான்; தனது எழுத்தில் காட்டினன்.

விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் தமிழில் போதிக்க முடியாது; ஆங்கிலம் இன்னும் பல்லாண்டுகள் கட்டாயப் பாடமாக இருக்க வேண்டும் என்று, அந்தோ! இன்றும் சில தமிழர்கள் புலம்புகிறார்கள்!

தமிழ் ஆட்சிமொழி ஆகும் நாள்தான் ஆங்கிலம் இல்லாமல் தமிழன் வாழ முடியாது என்ற புலப்பத்தின் வாயடைக்கும் நன்னாள்.

ஆகவே, இவ்வாண்டைய பாரதி விழாவில், 3 கோடித் தமிழ் மக்களும் ஒரே குரலில் எழுப்ப வேண்டிய குரலொலி என்ன? "தமிழர் ஆட்சி மலர்வதோடு தமிழ் ஆட்சியும் மலர வேண்டும்" என்பதுதான்.

"வாழ்க பாரதி வழி"

## குன்னியூர் ஐயரின் அடாபிடி!

தஞ்சை ஜில்லாவிலுள்ள 'பண்ணையாள்' என்று சொல்லப்படும் விவசாயத் தொழிலாளர்கள் பெரும்பாலும் ஹரிஜன மக்கள்.

சமூக இன்னல்களுக்கும் கொடிய பொருளாதாரச்சுரண்டலுக்கும் உட்படுத்தப்பட்டுள்ள சமூகத்தின் அகில பாதாளத்தில் உள்ள மக்கள் இவர்கள்.

இவர்களை முன்னேற்றுவதைத் தனது வாழ்க்கைப் பணியாகக் கொண்டிருந்தார் காந்தியடிகள். காங்கிரசும் இதைத் தனது பிரதான கொள்கைகளில் ஒன்றெனப் பறைசாற்றி வருகிறது.

ஆனல் நடைமுறை என்ன? தஞ்சை ஜில்லாவின் பெரும் காங்கிரஸ் தலைவரும் ஜில்லா போர்டு தலைவருமான குன்னியூர் சாம்பசிவ அய்யர் அந்த விவசாயத் தொழிலாளர்களின் பரம வைரியாக இன்று காட்சியளிக்கிறார்.

தஞ்சை பண்ணையாள் சட்டத்தின்படி அந்த விவசாயத் தொழிலாளர்களுக்குச் சில பாதுகாப்புகள் கிடைத்தன. 150 நாட்களுக்கு ஆண் பெண் இருவருக்கும் தினசரி $1\frac{3}{4}$ மரக்கால் நெல் வீதம் கூலி கிடைத்தது. இத்துடன் சட்டப்படி மிராசுதார் பண்ணையாளுக்கென்றே ஒதுக்கும் நிலத்திலிருந்து வருஷத்தில் 25 லிருந்து 30 கலம்வரை கிடைத்தது.

நீண்ட நெடுங்காலமாகப் போராடிவந்ததின் விளைவாகக் கிடைத்த இந்தச் சட்டப் பாதுகாப்புக்களை நிலப்பிரபுக்கள் நிராகரிப்பதற்கும் ராஜாஜி கொண்டு வந்த அந்தச் சட்டத்தில் ஒரு 'ஓட்டை' இருந்தது. தனக்குப் பிடிக்காத பண்ணையாளை ரூ. 150 நஷ்டஈடு தந்து வேலையிலிருந்து நீக்கிவிடலாம் என்பதே அந்தச் சட்டக் கோளாறு.

இதை உபயோகித்துக்கொண்டு தஞ்சை நிலப்பிரபுக்கள் பண்ணையாட்களை எல்லாம் வேலையிலிருந்தே நீக்கிவிட்டனர். இதன் மூலம் சட்டப்படி அவர்களுக்குக் கிடைத்த பாதுகாப்புகளைஎல்லாம் நிராகரித்தனர்.

இத்தகைய மிராசுதார் தாக்குதலை முறியடித்து நியாயம் வழங்கும்படி செய்யவே பண்ணையாட்கள் எனப்படும் அந்த விவசாயத் தொழிலாளர்கள் தங்களுக்கென்றேத் தனியானசங்கம் அமைத்துப் போராடினர். ஆணுக்கு 2 மரக்காலும், பெண்ணுக்கு $1\frac{1}{2}$ மரக்காலும் தினசரி கூலி கோரினர். இது கிடைத்தால் முன்னர் சட்டப்படி கிடைத்து வந்த கூலியின் அளவு கிடைக்கும்.

இது மறுக்கமுடியாத நியாயமான கோரிக்கை என்பதை உணர்ந்த பல மிராசுதார்கள், விவசாயத் தொழிலாளர்களுடன் பல இடங்களில் சமரஸத்திற்கு வந்துவிட்டனர்.

ஆனல் காங்கிரஸ் தலைவரும் மிகப் பெரும் நிலப்பிரபுக்களில் ஒருவருமான குன்னியூர் அய்யர் மட்டும் அடம்பிடிக்கிறார் என்றும் அடியாட்கள் வைத்து நியாயம் கோரும் விவசாயிகளை சித்ரவதை செய்கிறார் என்றும், இந்தக் காங்கிரஸ் நிலப்பிரபுவின் குண்டர்கள் பல ஊர்களில் கலகம் விளைவிக்கிறார்கள் என்றும் தெரிகிறது.

நிலைமை இவ்வாறிருக்க விவசாயிகளின் மேல் கலகக் குற்றஞ் சாட்டி பல விவசாயத் தலைவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

பல மிராசுதார்கள் ஒப்புக் கொண்டு விவசாயிகளுடன் சமரஸம் செய்து கொள்ளுகையில் குன்னியூர் அய்யர் மட்டும் அடம்பிடிப்பதைத் தடுக்க சர்க்கார் முன் வராதது ஏன்? இதுதான் காங்கிரஸின் ஹரிஜன சேவையா? இந்த நிலப் பிரபுவிற்கு எடுபிடி ஊழியம் புரிவது தான் போலீஸின் பொதுஜன ஊழியமா? இதுதான் சென்னை சர்க்கார் நிலச் சீர்திருத்தம் செய்யும் லட்சணமா? இது இல்லை என்றால் கைது செய்யப்பட்ட அனைவரையும் விடுதலை செய்து விவசாயிகளுடன் சமரஸம் செய்துகொள்ள குன்னியூராரை வற்புறுத்த வேண்டும்.

# தராசு

எஸ்.ஆர்.கே.

## இதற்குப் பெயர் கொள்கைத் தெளிவு!

கைப் புண்ணுக்குக் கண்ணுடி தேவையில்லை. தி.மு.க. அறிஞர் குழாத்தின் கொள்கைக் குழப்பம் சந்திசிரித்த சங்கதி. ஆனல் சந்தேகம் இருப்பவர்கள், "வினேபாவும் அண்ணத்துரையும்" என்ற வெளியீட்டைக் கதர் கடைகளில் வாங்கிப் படிக்கலாம்.

காஞ்சியில் நடந்த பூதான மகாநாட்டைப்பற்றி மதுரை திலகர் திடலில் பேசும்பொழுது மூன்றே கால் லட்சம் ரூபாய் விரயமானதென்றும், காந்திய எளிமையின் பெயரால் குபேரன் வீட்டுக் கல்யாணம் நடக்கிறதென்ற பொருள்பட அண்ணத்துரை பேசினர். அதே அறிஞர் குலத்திலகம், தம்மனூர் சென்று பூதான முனிவரைப் பேட்டிகண்ட சேதியை எடுத்துரைக்கும்பொழுது, "எளிமை இனிமை தருகிறது. தூய்மைப் பளிச்சிடுகிறது" என்று கதைக்கிறார். உண்மையாகச் சொன்ன வார்த்தை எது?

திராவிட நாடு தனியரசாகத் திகழுமென்று அண்ணத்துரை வினேபாவிடம் கூறினர். அந்தத் தனிநாடு, "பாக்கிஸ்தானின் அமைப்பைப் போலவே ஆகிவிடும்" என்பதையும் ஒத்துக் கொண்டார். அதன்மூலம், பாக்கிஸ்தான் சர்க்காரைப் போலவே இவர்களும் அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளின் கைப்பம்பரமாமாகச் சுழல்வார்களென்பதை அம்பலப் படுத்திக்கொண்டார். ஆனல் அடிக்குப் பயந்து உளறும் குற்றவாளியைப் போல, அடுத்த நிமிஷமே, திராவிட நாடு, "இந்திய பெடரேஷனுக்குள் (சமஷ்டிக்குள்) சப் பெடரேஷனை (உப சமஷ்டியாக) இயங்கும்" என்றும் கூறினர். ஒரு தனிநாடு, இன்னொரு ராஜ்யத்தின் உப சமஷ்டியாக எப்படி யிருக்கமுடியும்? தி.மு.க.வின் லட்சியம் தனிநாடா, உப சமஷ்டியா?

இந்திய பெடரேஷனை ஏற்றுக் கொண்டால், வெளிநாட்டு விவகாரம் சமஷ்டியின் அலுவலாகத்தான் இருக்க முடியும். அன்னிய நாட்டுக் கொள்கையை வகுத்து அமல் நடத்தும் அதிகாரக் கருவியே படைகளையும் வைத்திருக்க வேண்டுமென்பது அரசியல் ஞானத்தின் ஆரம்ப பாடம். ஆனல் திராவிட சப் பெடரேஷனிடம்தான் படையிருக்குமென்று அண்ணத்துரை கூறினர். இதைக் கேட்ட வினேபா, அறிஞரின் அறியாமையை உணர்ந்து அனுதாபம் கொண்டு "வெளிநாட்டு விவகாரங்கள் மத்திய அரசாங்கத்தின் கையிலிருந்தால், படையும் அவர்கள் கையில்தானே இருக்கும்?" என்று கேள்வி கேட்கிற முறையில் அரசியல் போதித்தார். உடனே, வெளிநாட்டு விவகாரங்களை இந்திய பெடரேஷன் சப் பெடரேஷனுடன் கலந்து ஆலோசித்து முடிவுகள் செய்யும்', என்று விளக்கம் தந்தார் அண்ணத்துரை.

விளக்கத்திலிருந்து குழப்பத்தைப் புரிந்துகொண்ட பாபா, அப்பொழுது திராவிட நாட்டுக் கற்பனை இலங்கையையொத்திருக்கிறது. விருப்பத்தின்பேரில் திராவிடநாடு இந்திய பெடரேஷனுடன் வெளிநாட்டு விவகாரங்களைப் பற்றி யோசிக்கும்?,' என்று விளக்கிக் கேட்க, 'ஆம்' என்று பதில் கூறினர் அண்ணத்துரை. திராவிட நாடு, இலங்கை மாதிரி இயங்குமானல், அது சப் பெடரேஷன் ஆகமுடியாது. இலங்கை இந்தியக் கூட்டரசில் இணைந்திருக்கவில்லை.

சிட நிமிஷங்களுக்குள் அண்ணத்துரை திராவிட நாட்டுக்கு மூன்று விளக்கங்கள் தந்துவிட்டார்! எது மெய், எது பொய்? திராவிடநாடு பாக்கிஸ்தான் மாதிரி பகை நாடாகுமா? இலங்கை மாதிரி இணைபிரியா நேச நாடாகுமா? அல்லது இந்தியக் கூட்டரசின் உறுப்பான உபசமஷ்டியாகுமா? அண்ணத்துரைக்குத்தான் வெளிச்சம்! இதற்குப் பெயர் கொள்கைத் தெளிவு!

வினேபா பொல்லாத மனிதர் தான். இந்த அளவுக்கு மானத்தை வாங்கியது போதுமென்று விட்டாரா? "நாலு மாகாணங்கள் ஒன்று சேர்ந்திருக்கும்பொழுது, ஒரு மாகாணத்துக்கு நியாயம் வழங்காமல் போய்விட்டால் என்ன செய்வீர்கள்!" என்று கேட்டார். "அதற்குத் தனித்துச் செல்லும் அதிகாரம் இருக்கிறது," என்று அண்ணத்துரை உடனுக்குடன பதில் தந்தார். தன்னுடைய குடியாட்சிப் பண்பை எடுத்துக்காட்டுவதாக அவரது எண்ணம். எனவே, ஒரு ஜில்லாத் தனித்துப் போக விரும்பினல் அனுமதி கொடுக்கலாம்என மீண்டும் பாபா கேட்டதும் "கொடுக்க வேண்டும்" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினர் அண்ணத்துரை. இது ஜனநாயகமா? அராஜகமா? திராவிடர் தனி இனம் என்ற அடிப்படையில் தி. மு. கவினர் தனியரசு கேட்கிறார்களா? அல்லது, ஒரே இனத்தினராயினும், ஒரு வட்டத்திலோ மாவட்டத்திலோ வாழும் மக்கள்கூடஇஷ்டப்பட்டுப் பிரிந்து போகலாமென்பது தி. மு. க. தத்துவமா?

திராவிட இன உணர்ச்சி, தென்னட்டு மக்களை ஒன்றுபடுத்துமென்றுகூறும் துணிவு அண்ணத்துரைக்கு இல்லை. வினேபாவின் சந்நிதானத்தில் அந்த அளவுக்கு அடித்துக் கூற அண்ணத்துரையாலும் முடியவில்லை. எனவேதான், "மத்திய அரசாங்கம் என்று ஒன்று இருக்கும் வரை இப்படிப்பட்ட அநீதிகள் நடந்து கொண்டுதான் இருக்கும்" என்று ஒரு தத்துவத்தை எடுத்துக் கூறினர். அந்த அநீதிகளை எதிர்க்க ஆந்திரரும் கன்னடியரும் தி மு க வில் திரள்வாரென்று குறிப்பாக உணர்த்தினர். ஆனல் மத்திய அரசாங்கத்தால் அநீதி ஏற்படுவதைத் தவிர்க்க முடியாதென்றால், திராவிட மத்திய அரசு, ஒரு மாகாணத்துக்கு அநீதி இழைப்பதையும் தவிர்க்க முடியாது. ஒரு மாகாண அரசாங்கம் ஒரு சில ஜில்லாக்களுக்கு அநீதி இழைப்பதையும் தவிர்க்க முடியாது. இந்த வகையில் வினேபா வாதத்தை நடத்திச் செல்லவே, ஜில்லாக்களுக்கும் பிரிந்துபோகும் உரிமை உண்டு என்ற அளவுக்கு அண்ணத்துரை போக வேண்டியதாயிற்று! இறுதியில், கிராமத்துக்குக் கிராமம் தனியாட்சி என்று சொல்வதில்தான் இந்த வாதம் முற்றுப்பெறும்.

இந்த விந்தையான அரசியல் விளக்கத்தைக் கேட்டு நீங்களும் நானும் வயிறு குலுங்கச் சிரித்திருப்போம். ஆனல் வினேபா எதிரி மனம் புண்படுவதை விரும்பாத அஹிம்சாமூர்த்தி அல்லவா? அரியநாயகம் அவர்களைப் பார்த்து, "இவர் (அண்ணத்துரை) மிகவும் கள்ளங் கபடமற்ற மனிதர்" என்று கூறினராம்.

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவது அன்று; உலகத்து இயற்கை" என்று ஒரு புறநானூற்றுக் கவி கூறும். ஒருவனை ஒருவன் கெடுப்பதும் அழிப்பதும் உலகத்து இயற்கை என்பது இதன் கருத்து. அண்ணத்துரையின் வாதமும் அதுவே. அதனல் தான் எந்த மத்திய அரசும் அநீதிக்கு உறைவிடமாகத் திகழுமென்று கூறுகிறார்.

திராவிடநாட்டுக் கோரிக்கைக்கு இந்த வாதம் பயன்படுமென்பது அவரது எண்ணம். ஆனல், இந்த வாதம் எந்த நாட்டுக்கும் எந்த அரசுக்கும் எமனக வாய்க்கும் அராஜகவாதமென்பதை பாபாவே சுட்டிக்காட்டினர். இந்த வெள்ளிடை உண்மைகூட விளங்கவில்லையென்றால் அண்ணத்துரை உலக இயல் அறியாத வெகுளியாக இருக்கவேண்டும்; அல்லது புரிந்தும் புரியாத மாதிரிப் பாசாங்குச் செய்கிறாரென்றால், பிறரை ஏமாளிகளாகக் கருதும் அளவுக்குத் தன் திறமையில் மிகுந்த நம்பிக்கை கொண்டவராக இருக்க வேண்டும். இரு வகையிலும் பொருள்படும்விதத்தில், தி. மு. க. தலைவரைக் "கள்ளங் கபடமற்ற மனிதர்" என்று கணித்துக் கூடியிருப்போரை நகைக்கும்படி செய்தார் பாபா!

இந்த அழகில் கொள்கை வகுத்திருப்பவர்கள்தான், பிறருக்குக் கொள்கைக் குழப்பமென்று பேசுகிறார்கள்! கண்ணடி வீட்டிலிருந்துகொண்டு, கருங்கல் வீட்டின்மீது கல்லை எடுத்து எறிகிறார்கள். அது வேகம்பெற்று மீண்டும் வந்து அவர்களது கண்ணடி வீட்டைத் தகர்த்தால், கனகோபம் கொள்கிறார்கள்!

## மே. திட்டத்தை..

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ரேல் சர்க்கார் தங்களது ராணுவ தளங்களை பிரிட்டன் உபயோகப் படுத்திக் கொள்வதற்கு அனுமதியளித்துள்ளன என்றும் அந்தப் பத்திரிகைகள் தெரிவித்துள்ளன.

### தளராத உறுதி

கெய்ரோ, செப். 9—

சைப்ரஸில் பிரிட்டிஷ் பிரெஞ்சுத் துருப்புகள் இறக்கப்பட்டுள்ளதுபற்றி கர்னல் நாஸர் மென்சிஸிடம் எகிப்தின் எதிர்ப்பைத் தெரிவித்ததோடு, இத்தகைய நடவடிக்கைகள் சகஜ நிலைமை ஏற்படுவதற்குப் பெரும் இடையூறாக இருக்கும் என்று எச்சரித்ததாகவும் தெரிகிறது.

பேச்சு வார்த்தைகள் முறியுமானல் அதனல் ஏற்படக்கூடிய விளைவுகள் பற்றி மென்ஸிஸ் கோஷ்டியினர் நாஸரிடம் பயங்கரமாகப் படம்பிடித்துக் காட்டிய நிலையிலும், எகிப்தின் உறுதியும், அரேபிய தேசங்களின் ஒற்றுமையும் அணுவும் அசையவில்லை என்பது இங்கு முக்கியமாக எடுத்துக் காட்டப்படுகிறது. இதனல், சூயஸ் கால்வாயை சர்வதேச ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவருவது சம்பந்தமானக் கொள்கை விவேகமானதா என்றுகூட தற்போது மென்சிஸ் கோஷ்டியினர் சந்தேகப்பட ஆரம்பித்துள்ளனர் என்று கூறப்படுகிறது.

### ராஜினமா செய்

லண்டன், செப். 9...

சூயஸ் நெருக்கடிக்குப் பரிகாரம் காண இயலாது போனல், மற்றவர்கள் இது சம்பந்தமாக முயற்சி செய்வதற்கு வழி விட்டுவிட்டு, ஈடன் பிரதமர் பதவியிலிருந்து ராஜினமா செய்துவிட வேண்டும் என்று பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் வெளிவிவகார பிரமுகர் ஆல்பர்ட் ராபன்ஸ் இன்று குறிப்பிட்டார்.

(முதற் பக்கத் தொடர்ச்சி)

கள் 2,744. மொத்த தொழிலாளர், சிப்பந்திகள் 14,500. மானேஜிங் ஏஜண்டு கமிஷன் மட்டும் ரூ. 12 லட்சத்து 74 ஆயிரம். பி அண்டு சியில் வேலைப்பளு அதிகம்.

தொழிலாளர் அடிப்படைச் சம்பளம் ரூ. 28. பஞ்சப்படி புள்ளிக்கு 3 அணு.

சென்னை தொழிலாளர் சங்கக் கோரிக்கைகள்மீது நீதிபதி ராமசாமிக் கவுண்டர் முன்னிலையில் விசாரணை நடந்துவருகிறது.

# போலீஸ் அடக்குமுறை

## கோவை மில் தொழிலாளர் சங்கச் சொத்துக்கள் நாசம்!

### பலர் கைது! ஊழியர்களுக்கு அடி

### தோழர் கே. ரமணியின் கண்டனம்

கோவை சிவானந்தா மில் தொழிலாளிகளிடையே 2-9-56ல் ஓர் தகராறு நடைபெற்றபோது, ஷிப்ட் மில்லில் வேலை செய்யும் கொண்டப்பன் என்ற தொழிலாளி ஸ்தலத்திலேயே இறந்து விட்டார். மற்றுமிரு தொழிலாளிகள் காயப்பட்டு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டுள்ளார்கள். சில காலமாகவே சிவானந்தா மில் பக்கத்திலும், ராமகிருஷ்ணா மில் பக்கத்திலும் ரவுடிகள் கூட்டம் சுற்றித் திரிந்து கோவை மில் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்களையும் ஊழியர்களையும் அடிப்பதும், பயமுறுத்துவதும், பெண்களை சேலையைப் பிடித்து இழுத்து மானபங்கம் செய்வதும் மிரட்டுவதுமா யிருந்தார்கள். 1955 நவம்பரில் சிவானந்தா மில் முன் தகராறு நடைபெற்று, பலருக்குக் காயமும் ஏற்பட்டு, போலீஸ் கேசும் நடந்துள்ளது.

சிவானந்தா, ராமகிருஷ்ணா ஆகிய இரண்டு மில்களும் புதிதாகக் கட்டப்பட்டவை. இவைகளில் தொழிற் சங்க இயக்கம் பலப்பட்டு, தொழிலாளர்கள் பல கோரிக்கைகளை அடைந்திருக்கிறார்கள். இதை பல வீனப்படுத்தவும் பிளவுண்டாக்கவுமே இப்படிப்பட்ட தாக்குதல் நடப்பதாக மில் தொழிலாளர் சங்கம் மகஜர்கள், கடிதங்கள், தூது கோஷ்டிகள் மூலம் போலீஸ் அதிகாரிகளுக்கு தெரியப்படுத்தி வந்திருக்கிறது. ஆனால் போலீஸ், ரவுடிகளை அடக்கவில்லை. அதற்குப் பதிலாக மில் தொழிலாளர் சங்க ஊழியர்கள் மீதே நடவடிக்கை எடுத்துவந்தது. அதனால் ரவுடிகளுக்கு ஊக்க மேற்பட்டு, அதன் உச்சகட்டமாக ஞாயிற்றுக்கிழமை சம்பவம் ஏற்பட்டது. உடனே போலீஸார் செய்ததென்ன?

#### கட்டிவைத்து அடித்தனர்

வேலைக்குச் சேர சிவானந்தா மில்லுக்கு விண்ணப்பம்கொடுத்து காத்துக் கொண்டிருந்த சுப்பிரமணியன்என்ற தொழிலாளியைப் பிடித்து மரத்தில் கட்டி வைத்து அடித்தனர். பல தொழிலாளர்களைக் கைது செய்தனர். சிவானந்தா மில் முன்னுள்ள கிளைச் சங்க சைக்கிள்களையும் எடுத்துச் சென்றுவிட்டனர்.

#### தியாகிகள் நிலையத்தில்

மில் தொழிலாளர் சங்க தலைமைக் காரியாலயமான தியாகிகள் நிலையத்துக்குள் புகுந்து போர்டை அடித்து உடைத்து, சாக்கடையில் எறிந்தார்கள். வாசலில் நிறுத்தியிருந்த சைக்கிளையும் அடித்து நொறுக்கினார்கள்.

#### சோமசுந்தராவில்

சோமசுந்தரா மில் கிளைச் சங்கத்திற்குள் புகுந்து தூங்கிக் கொண்டிருந்த ஆபீஸ் காரியதரிசி தோழர் கிருஷ்ணமூர்த்தியை அடித்தார்கள். லெனின் படம் உட்பட 3 படங்களை உடைத்தார்கள். கணக்குப் புஸ்தகத்தை எடுத்து ஜூலை, ஆகஸ்டு மாதக் கணக்குப் பக்கங்களைக் கிழித்தார்கள். 6 பேரைக் கைது செய்து கொண்டு போனார்கள்.

#### பீளமேடு

பீளமேடு கிளைச்சங்கத்தின் கதவுகளை உடைத்து, ரிகார்டுகளைக் கிழித்து, காலில்போட்டு மிதித்தார்கள். தட்டுமுட்டுச் சாமான்களைபெல்லாம் அடித்து நொறுக்கினார்கள்.

#### சிங்காநல்லூர் உடையார்பாளையம்

இங்கு கிளைச் சங்கத்தின் பூட்டை உடைத்து, ரிகார்டுகளைக் கிழித்து, மின்சார பல்புகள், மீட்டர்களை நாசமாக்கினார்கள்.

#### ராமகிருஷ்ணா மில்

இங்குள்ள கிளைச்சங்கத்தில் புகுந்து செங்கொடிகளை எடுத்துச் சென்றார்கள்.

போலீஸின் இச் செய்கைகளானது, தொழிற்சங்கத்தின் மீது பெரும் தாக்குதல் தொடுத்து தொழிலாளர்களைப் பயமுறுத்துவதாக இருக்கிறது. தகராறு சம்பந்தப்பட்ட உண்மைகளைக்கண்டு பிடிக்க இப்படிப்பட்ட காரியங்களை எந்த அதிகாரியும் செய்ய மாட்டார்.

கொலை நடந்ததற்கு யார் காரணஸ்தர்கள் என்று இனிமேல் தான் கண்டுபிடிக்க வேண்டியுள்ளது. அதற்குள் மில் தொழிலாளர் சங்கத்தின்மீது தாக்குதல் நடத்துவது எந்தச் சட்டத்தைச் சேர்ந்தது? எந்த ஜனநாயகத்தைச் சேர்ந்தது? போலீஸ் அதிகாரியும் சர்க்காரும் இதற்குப் பதில் கூறியாகவேண்டும்.

#### சகலரும் அணி திரள்க!

பல வருடங்களாக எதிர்பார்த்த ஒற்றுமையை கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும் கோவை மில் தொழிலாளர் சங்கமும் சாதித்து, பல வெற்றிகளையும் சாதித்துள்ளன. இதைக் கண்டு நடுநடுங்கும் முதலாளிக் கூட்டமும் அவர்களின் கையாட்களும் பிளவுக்காரர்களும் செய்யும் சூழ்ச்சிதான் ரவுடிகளின் அட்டகாசங்கள். இவற்றை மதியாமல் தொழிலாளர்கள் அனைவரும், எக்காரணத்தைக் கொண்டும் ஒற்றுமைக்குப் பங்கம் வராமல் பாதுகாக்க உறுதியாக ஒன்று திரளும்படி எல்லோரையும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கே. ரமணி
கூட்டுக் காரியதரிசி,
தமிழ்நாடு தொழிற் சங்கக் காங்கிரஸ்.
3—9—56.

## பஞ்சாயத்து தொழிலாளர் போராட முடிவு

திருப்பத்தூர், செப். 7—
வீட்டு வாடகை, போனஸ் முதலிய கோரிக்கைகளை ஜோலார்பேட்டை பஞ்சாயத்துத் தொழிலாளர்கள் பஞ்சாயத் போர்டுக்கு அனுப்பியுள்ளனர். 7-9-56ல் மகா சபையும் நடந்தது.

●

அலங்காயம் பஞ்சாயத்துத் தொழிலாளர் மகாசபை 6-9-56ல் கூடி மேற்படி தீர்மானத்தை நிறைவேற்றி யுள்ளது. ஜி. க. செயலாளர் எஸ். எம். நாகன், ஆர். நாகய்யா முதலியோர் தீர்மானங்களை விளக்கிப் பேசினர்.

குடியாத்தம், செப். 7—
பேர்ணும்பட்டு பஞ்சாயத்துத் தொழிலாளர் மகா சபை 26-9-56 கண்டன தினத்தை வெற்றிகரமாக நடத்தத் தீர்மானித்திருக்கிறது. (ந. கி.)

# மறைமுக வரிகள் அதிகரிக்கும்!

### இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் பற்றி மந்திரி டி. டி. கே.

புதுடெல்லி, செப். 7—
இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் பொறுத்த வரையில் உள்ள பிரச்சினை உள்நாட்டில் செல்வாதாரம் தேடுவதல்ல. வெளி நாட்டுச் செலாவணி, தொழில் நுட்பம் வாய்ந்த ஆள்பலம், விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவது, இவையே என்று நிதி மந்திரி திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி இன்று ராஜ்ய சபையில் கூறினார்.

தொழில்களையும் வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளையும் பொறுத்த வரையில் சர்க்கார் ஒரு தந்திர உபாயமான முறையில் கட்டுப்பாடுகளைக் கொண்டுவர உத்தேசித்திருக்கிறது என்று குறிப்பிட்டார். விலைவாசிகள் நியாயமான மட்டத்தில் நிலவ ஆவன செய்யப்படுமென்றார்.

இரண்டாவது திட்டத்திற்கான செலவு ரூ. 4800 கோடியுடன் நிற்காது என்பது சர்க்காருக்குத் தெரியும். மேலதிகமான பணம் தேவை. தேவைக்கும் இருப்புக்கும் உள்ள வித்தியாசத்தை சரிக்கட்டவும் வேண்டும் என்று கூறிய டி. டி. கே. உபரியாகத் தேவைப்படும் பணம் ரூ. 1200 கோடி இருக்கும் என்றார். திட்டங்களுக்குச் செலவிடுகையில் பற்றாக்குறை நிதி நிலைமை (நோட்டுகளை அச்சடித்து பணக் குறைவை நிரப்புவது) தவிர்க்கமுடியாத ஒன்றே என்றார்.

வருங்காலத்தில் மக்களுக்கு தேவையான பொருள்களும், நிர்வாக சேவைகளும் அளிக்க வேண்டுமானால் மேலும் மேலும் அதிகமாக மறைமுக வரிகளைப் போடவேண்டி நேரும் என்று அவர் கூறினார்.

## சீன தலைவர்களுக்கு இலங்கை அழைப்பு

கொழும்பு, செப். 5—
இலங்கையிலுள்ள மூன்று பிரதான தொழிற் சங்க சம்மேளனங்களான இலங்கை தொழிற் சங்க சம்மேளனம், பெடரேஷன் ஆப்லேபர், ஜனநாயக தொழிலாளர் காங்கிரஸ் இவற்றின் சார்பில் இவற்றின் தலைவர்களான தோழர்கள் பீட்டர் கெனமன், டாக்டர் என். எம். பெர்ரைரா, ஏ. அஸீஸ் மூவரும் ஒன்று சேர்ந்து சீனாவிலிருந்து ஒரு தொழிற் சங்க தூது கோஷ்டியை அனுப்புமாறு அகில சீன தொழிலாளர் சம்மேளனத்திற்கு கூட்டு அழைப்பு ஒன்றை அனுப்பியிருக்கின்றனர்.

# ஆஷாடபூதிகளுக்கு சாட்டை!

### திருக்குறளுக்கு வினோபாஜி கொடுத்த 'உதாரணம்!

கோவை, செப். 5—
இன்று நடைபெற்ற வினோபாஜியின் யாத்திரையின்போது ஒரு சுவையான சம்பவம் நடைபெற்றது. திருக்குறள் நன்கு கற்றுத் தெரிந்த அன்பர் ஒருவரை திரு. ச. ஜெகந்நாதன் வினோபாஜிக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அந்த அன்பரிடம் 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும்' என்று ஆரம்பிக்கும் குறளுக்கு உதாரணம் ஒன்று கூறும்படி வினோபா கேட்டார். அதற்கு அந்த அன்பர் கீழ்க்கண்டவாறு கூறினார்: "ஒருநாய் உருவம் கல்லில் மிக அழகாக, தத்ரூபமாக செதுக்கப்பட்டிருக்கிறது. தூரத்திலிருந்துப் பார்த்தால் அது அசல் நாய் போலவேத் தெரிகிறது. ஆனால் உண்மையில் அது நாயா, கல்லா என்று கண்டு கொள்வதுதான் அறிவு" என்றார் திருக்குறள் அன்பர். இந்த உதாரணம் வினோபாவுக்குத் திருப்தியாகப்படவில்லை. ஆகவே அவரே ஒரு உதாரணம் கூற ஆரம்பித்தார்:

"ஒரு எம். எல். ஏ. இருக்கிறார். அவருடைய தொகுதியில் பாபா யாத்திரை செய்கிறார். அந்த எம். எல். ஏ.யும் பாபாவுடன் யாத்திரையில் கலந்துகொள்கிறார். பார்த்தால் பூதானத்தில் ரொம்பவும் அக்கரை கொண்டவர் போல அவர் காட்சியளிக்கிறார். ஆனால் உண்மையில் தனது எம்.எல்.ஏ. ஸ்தானத்தை அந்தத் தொகுதியில் ஸ்திரப்படுத்துவதற்காகவே பாபாவுடன் அவர் வருகிறார். இதுதான் மெய்ப்பொருள். இதனைக் கண்டு கொள்வதுதான் அறிவு" என்று வினோபா அந்தக் குறிப்பிட்டத் திருக்குறளுக்கு விளக்கம் கூறியதும் கூட்டத்தினர் பெரும் சிரிப்பொலி எழுப்பினர்.

## விலைக் கட்டுப்பாடு பிரம்மாஸ்திரம்

### துணி வரிபற்றி டி. டி. கே.

புதுடெல்லி, செப். 8—
மில் துணிமீது அண்மையில் விதிக்கப்பட்ட எக்சைஸ் வரிகளின் விளைவாகத் துணி விலை அதிகரிக்கப்பட்டால் மேலும் அதிகமான வரி வசூலிக்கப்படும். அப்பொழுதும் விடாப்பிடியாக விலைகள் ஏறு முகத்தில் சென்று 'புயல் கடுமை'யாகுமானால் சர்க்கார் விலைக் கட்டுப்பாட்டைப் புகுத்த நேரலாம் என்று நிதி மந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி பஞ்சாலைத் தொழிலதிபர்களை எச்சரித்தார்.

ராஜ்ய சபையில் நடைபெற்ற விவாதத்திற்குப் பதிலளிக்கு முறையில் பேசிய நிதி மந்திரி விலைக் கட்டுப்பாடு பிரம்மாஸ்திரம் போன்றதென்றும் அதை ஒரு தடவைக்குமேல் பிரயோகிக்கக் கூடாதென்றும் கூறினார்.

# லஞ்சப்பேய்கள்மீது நடவடிக்கை

## கிராம முனிசீப்புகள் சஸ்பெண்ட்

### விவசாய சங்கத்தின் வெற்றி

திருமங்கலம், செப். 9—
விவசாய சங்கத்தின் முயற்சியால் திருமங்கலம் தாலுக்கா பூசலட்புரம் கிராம முனிசீப் ஒரு வருட காலத்திற்கு 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டார். இவர், 1363-ம் பசலியில் வஜா ஆன நிலங்களுக்கும் கூட வரி வசூல் செய்தார் என்றும், வசூலான தொகைகளுக்கு ரசீது கொடுக்காது ஏமாற்றினார் என்றும் சொல்லப்படுகிறது. அதோடு கடன் வழங்குவதில் பெருவாரியாக இவர் லஞ்சம் வாங்கியதாகவும் கூறப்படுகிறது. இதே போன்றக் குற்றச்சாட்டுகளுக்காக தங்களாச்சேரி, சாப்டூர் கிராம முனிசீப்களும் 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டுள்ளனர். இது விஷயத்தில் திருமங்கலம் தாலுகா விவசாய சங்கம் எடுத்துக்கொண்ட தீவிர நடவடிக்கைகளை பொது மக்கள் பெரிதும் பாராட்டுகிறார்கள். (ந. கி.)

## அரசியல் கைதிகள் விடுதலை

ஆனைமலை, செப். 7—
பல வருடங்களாகச் சிறையில் வாடி வரும் தோழர் பாலதண்டாயுதம் உள்ளிட்ட அரசியல் கைதிகளை உடனடி விடுதலை செய்ய வேண்டும் என்று ஆனைமலை கம்யூனிஸ்ட் கட்சியின் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு முதன் மந்திரிக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

## காலனியாதிக்கத்தை பூண்டோடு ஒழிப்போம்

### மாணவர் மாநாட்டில் பேராசிரியர் முழக்கம்

கண்டி, (இலங்கை) செப். 3—
காலனியாதிக்கம் படு பாதகமானது. அதை எங்கும் தலைகாட்டவிடாமல் பூண்டோடு ஒழித்துவிட வேண்டும் என்று இங்கு ஆரம்பமான தென்கிழக்காசிய மாணவர் மகாநாட்டில் இலங்கை சர்வகலாசாலைப் பேராசிரியர் டாக்டர் பி. மல்லசேகர கூறினார்.

ஆசிய மக்களுக்கு எப்பொழுதும் தான் எஜமானனாக இருக்க வேண்டும் என்ற அர் எண்ணம் மேலைநாடுகளுக்கு இருந்திருப்பதை இடித்துக் கூறினார். மகாநாடு விடுதலை இயக்கமும் மாணவர் வாழ்வும்பற்றிச் சர்ச்சை நடத்தியது.

## சென்னை, மைசூர், திரு-கொச்சி

### 2000 நியாயவிலைக் கடை

சென்னை, செப். 6—
சென்னை, திரு-கொச்சி, மைசூர் ஆகிய ராஜ்யங்களிலும் உடனடியாக 250 லிருந்து 2000 நியாயவிலை தானியக் கடைகள் ஏற்படுத்தப்படும் என்று மத்திய உதவி உணவு மந்திரி திரு. எம். வி. கிருஷ்ணப்பா தெரிவித்தார்.

## மீண்டும் செங்கொடிச் சங்கத்தில் சேர்ந்தனர்

விஜயபுரம், செப். 6—
தமிழ்நாடு விவசாயிகள் சங்கம் பற்றி அபாண்டங்களைப் பரப்பி பிரிவினைகளை விதைத்து காங்கிரஸின் பக்கமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்ட நாகை தாலுகா தேவூர் விவசாயிகள் 22 பேர் மீண்டும் தமது உரிமை ஸ்தாபனமான விவசாய சங்கத்தில் சேர்ந்தனர். இந்த விவரத்தை தாலுகா வி. ச.க்கும் எழுதித் தெரிவித்துள்ளனர். (ந-கி.)

## பெருங்குளத்தில் தீவிபத்து

இராமநாதபுரம், செப். 7—
இத்தாலுகாவைச் சேர்ந்த பெருங்குளம் இராமத்தில் ஏற்பட்ட தீவிபத்தால் 53 வீடுகள் எரிந்துபோயின. ரூ. 3 லட்சம் பெறுமான சொத்துக்கள் அழிந்ததாகத் தெரிகிறது. இராமக் கமிட்டி நிவாரணம் கோரி சர்க்காருக்குத் தந்தியடித்திருக்கிறது.

# நடக்க இருப்பவை

### பாரதி விழா

சென்னை: செப். 11, 12 தேதிகளில் (மாலை 6 மணிக்கு) தியாகராய நகர் வாணி மஹாலில் கவிஞர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை தலைமையில் பாரதி விழா நடைபெறும்.

# சென்னை மார்க்கெட்

## தங்கம் வெள்ளி

சென்னை, செப். 10—

| | |
|---|---|
| சவரன் | 67-14-0 |
| தங்கம் ரெடி | 104-0-0 |
| மூசை தங்கம் | 102-8-0 |
| வெள்ளி 100 தோலா எடை | 176-12-0 |
| வெள்ளி 1 ரூபாய் எடை | 1-12-6 |

### மணிலாப்பயறு

| | |
|---|---|
| 531 ரா. கொண்ட பாரம் 1-க்கு விற்பனைவரி உள்பட புதிய சரக்கு உயர்ந்த ரகம் | 172-0-0 |
| சாதா | 170-0-0 |

### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி (மதராஸ்) கிடங்கு டெலிவரி 3% F. F. A. (மொத்த விலை ரெடி) | 326-0-0 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | 295-0-0 |
| சேலம் "தாமரை", "அன்னம்" (37½ ரா. டின் உள்பட) | 23-0-9 |

### தேங்காய் எண்ணெய்

| | |
|---|---|
| 7½ ரா, கொண்ட டின் 1-க்கு (விற்பனை வரி தனி) கொல்லம் சரக்கு எம். எஸ். மார்க் | 27-12-9 |
| ராஜா மார்க்கு | 27-0-9 |
| அம்பு மார்க்கு | 27-0-9 |

### சர்க்கரை

| | |
|---|---|
| (எக்ஸைஸ்வரி விற்பனை வரி உள்பட) பிரிட்டிஷ் சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரை (2 அந்தர்) | 92-0-9 |
| கான்பூர் (229 ரா.) | 95-0-9 |
| சாமல் கோட்டை (2 அந்தர்) | 94-1-9 |

மதராஸ் ஹார்பரில்

# வேலைநிறுத்த நோட்டீஸ்

## தொழிலாளர் உரிமையை மறுப்பதா க்ஷேமநல ஆட்சி?

### ஷா நவாஸ்கானுக்கு ஏ. எஸ். கே. அய்யங்கார் பதில்

சென்னை, செப். 8—

சென்னை ஹார்பர் தொழிலாளர் சங்கக் காரியதரிசி தோழர் ஏ. எஸ். கே. அய்யங்கார் கீழ் வரும் அறிக்கை விடுத்துள்ளார்.

சர்க்கார் பார்லிமெண்டரி காரியதரிசி திரு ஷா நவாஸ்கான் சென்னை ஹார்பர் தொழிலாளர் வேலைநிறுத்தம் சம்பந்தமாக கேட்கப்பட்ட ஒரு கேள்விக்குப் பதிலளித்தாராம். சென்ற ஆண்டு கையெழுத்தான ஒப்பந்தத்தின் பிரகாரம் நிலக்கரி மூலப் பொருள் முதலாளிகள் தங்களது வேலையாட்களுக்கு கூலி தருகின்றனர் என்று சொன்னாராம். இது உண்மையேயல்ல. அவ்விதமே சம்பளம் கொடுக்கப்படுகிறது என்று ருசுப்பிக்க எதுவுமில்லை. ஒருவர் தவிர கையெழுத்திட்ட வேறு எந்த முதலாளியும் ஒப்பந்தப் பிரகாரம் சம்பளம் தருவதில்லை. இதில் மிக மோசமான ஒரு நபர் ரயில்வே போர்டிற்காக நிலக்கரி இறக்குமதி செய்யும் ஒரு முதலாளி.

சென்னை துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்படும் மொத்தம் 4 லட்சத்து 60 ஆயிரம் டன் நிலக்கரியில் 4 லட்சம் ரயில்வேக்காகவே. இதை இறக்குமதிசெய்ய எந்த காண்டிராக்டர் மிகக் குறைந்த பட்ச டெண்டர் போடுகிறாரோ அவருக்கு அனுமதி கொடுக்கப்படுகிறது. இந்த மாதிரி செய்வதால் மிகக் குறைந்த சம்பளத்தில் தொழிலாளரைக் கசக்கிப்பிழிவதாகவே ரயில்வே நிர்வாகத்தின் போக்கு உள்ளது என்பதைப்பற்றி ரயில்வே நிர்வாகம் அக்கரை கொள்வதில்லை. ரயில்வே காண்டிராக்டரான திரு. வரதராஜுலு நாயுடு இதைத்தான் செய்கிறார்.

இதனால் தொழிலாளர்களிடையே மிகப்பெரிய ஆத்திரம் ஏற்பட்டுள்ளது. மிக மோசமான சம்பளம்! மிகக் கொடிய சுரண்டல்! தொழிலாளர் எத்தனை வருஷங்களாக வேலை பார்த்தாலும் அன்றாடக் கூலியாகவே கருதப்படுகிறார்கள்.

எனவேதான் ஜூலை 1956 வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளது. பல கோரிக்கைகளில் 'ரோல்ஸ்' வைப்பது, போட்டோபாஸ், அடையாளச் சீட்டு, தினசரிச் சம்பள விகிதமாகக் கணக்கிட்டு மாதமொரு முறை சம்பளப் பட்டுவாடா போன்ற கோரிக்கைகளை முன்வைத்துப் போராடப் போகிறார்கள்.

வேடிக்கை என்னவென்றால் நலஉரிமை சர்க்கார் என்று சொல்லிக் கொள்ளும் இன்றைய ஆட்சியிலே தொழிலாளர் தங்கள் நல உரிமைகளுக்காக வேலை நிறுத்தம் செய்யவேண்டி இருக்கிறது.

### விசைத்தறி எதிர்ப்பு மகாநாடு

அருப்புக்கோட்டை, செப். 7—

வெகுவிரைவில் விசைத்தறி எதிர்ப்பு மகாநாடு நடத்துவதென்றும், அதுசம்பந்தமாக 16-9-56ல் கூடும் அருப்புக்கோட்டை நகர், தாலூகா கைத்தறி நெசவாளர்களின் விரிவடைந்த கூட்டத்தில் இறுதி முடிவுகள் செய்வதென்றும், செப். 6ந் தேதியன்று நடைபெற்ற நெசவாளர் சங்கக்கூட்டத்தில் முடிவுசெய்யப்பட்டது.

சங்கத்தலைவர் தோழர் எஸ். ரமணி கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். (ந. நி.)

### 750 பீடித் தொழிலாளர் ஊர்வல ஆர்ப்பாட்டம்

சேலம், செப். 5—

ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்கக் கொடியின்கீழ், தலைவர் ஜி. சாமுவேல் அவர்களின் தலைமையில் 750க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் 5–9–56ல் ஊர்வலமாகப் புறப்பட்டு, நகரின் முக்கிய வீதிகள் வழியாக கலெக்டர் ஆபீசை அடைந்தனர். 1000 பீடிக்கு ரூ. 2-4-0 கூலி, வாரம் முழுவதும் வேலை, பேக்டரி சட்டத்தை அமுலாக்கவேண்டும், கண்ட்ராக்ட் முறை ஒழிக்கப்பட்டு பீடித் தொழிலுக்கு தனியாக சட்டம் வேண்டும் என்ற அடிப்படையில் சென்னையில் தொழில் மந்திரியிடம் சமர்ப்பித்த யாதாஸ்தை ஒட்டிய மகஜர் ஒன்றை தோழர்கள் சாமுவேல், கூடுமியான் ஆகியோரடங்கிய தூதுகோஷ்டியினர் சமர்ப்பித்தனர்.

# கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து யாரும் விலகவில்லை

## பொய்ப் பிரசாரத்துக்கு மறுப்பு

புதுவை, செப் 7—

5–9–56ந் தேதிய "தினமணி", "சுதேசமித்திரன்" பத்திரிகைகளில், "புதுவை வடவண்டை புல்வார் பகுதியிலிருந்து 100 பேர் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலகி காங்கிரசில் சேர்ந்துவிட்டதாக வந்துள்ள செய்தி கண்டு ஆச்சரியமடைந்தோம். அச் செய்தி அப்பட்டமான பொய். அதில் குறிப்பிடப்பட்டுள்ள பேர்வழிகள் கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்களல்ல. அப்படி யாரும் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலகவுமில்லை.

இது காங்கிரசின் பொய்ப் பிரசாரம். வருகின்ற 23–9–56ந் தேதியன்று புதுவை பெருமாள் கோயில் தொகுதியில் முனிசிபல் உப தேர்தல் நடைபெற விருக்கிறது. அதற்கு புதுவை ராஜ்ய மாதர் சங்கக் காரியதரிசி திருமதி சரஸ்வதி சுப்பையா மக்கள் முன்னணி அபேட்சகராகப் போட்டியிடுகிறார். இது கண்டு பீதியடைந்த காங்கிரஸ்காரர்கள் மக்களை ஏமாற்றுவதற்காக இத்தகைய வதந்திகளையும், பொய்ப் பிரசாரத்தையும் அவிழ்த்துவிட்டுள்ளனர். இது கண்டு மக்கள் ஏமாற மாட்டார்கள்.

23–9–56 ல் நடைபெறும் முனிசிபல் உபதேர்தலில் மக்கள் திருமதி சரஸ்வதி சுப்பையாவுக்கு ஆலமரப் பெட்டியில் (மக்கள் முன்னணி) பெருவாரியாக ஓட்டளித்துக் காங்கிரஸ் அபேட்சகரைத் தோற்கடிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை." என்று புதுவை ராஜ்பக் கம்யூனிஸ்ட் கட்சி, வாழைக்குளம் யூனிட் காரியதரிசி தோழர். தா. வேலு எழுதுகிறார்.

### எகிப்தை எதிர்க்க இலங்கை இணங்காது

செயண்ட்ஜான்ஸ், நியூபவுண்ட்லந்து, செப். 4—

எகிப்துக்கு எதிராகப் பலாத்கார நடவடிக்கைகளைஎடுப்பதற்கு இலங்கை ஒருபொழுதும் உடன்படாது என்றும், வயிரம் பாய்ந்த நடுநிலைமையே இலங்கையின் குறிக்கோள் என்றும் சுற்றுப்பிரயாணம் செய்துவரும் இலங்கை பிஷப் இன்று கூறினார். ஆசிய நாடுகளின் சமய போதனைகள் யாவுமே பலாத்காரத்தை ஒறுத்து வந்துள்ளன என்றும், முதல் அணுகுண்டுக்கு இரையானதும் அதன் விஷக்கதிர்களால் வேதனைப்படுவதும் ஆசிய மக்களே ஆதலால் யுத்த பயங்கரத்தை ஆசிய மக்கள் விடுப்பார்கள் என்றும் அவர் கூறினார்.

# புயல் நிவாரணக் கடன் உதவிகோரி விவசாயிகள்

## கால்நடை ஜதா

காரியாபட்டி, செப். 8—

7-9-56 முற்பகலில் 60க்கு மேற்பட்ட (2 பெண்கள் உட்பட) விவசாயிகள் 6 மைல்கள் ஆவியூரிலிருந்து கால்நடையாக நடந்து காரியாபட்டிக்கு வந்தனர். 'கடனுதவி வேண்டும்' 'மனுக்களை உடனே பைசல் செய்க' 'காலதாமதத்தைத் தடுப்போம்' என்று கோஷித்துக்கொண்டு காரியாபட்டி கிராமத்தை ஊர்வலமாகச் சுற்றிவந்தனர்.

தோழர் ஆ. முத்துக்குமாரசாமி, எம். கிருஷ்ணன், பி. ஏ பி. ஆறுமுகம் முதலியோர் அடங்கிய தூதுகோஷ்டி (1) கடனுதவி, (2) மனுக்களை உடனே பைசல் செய்வது முதலிய கோரிக்கைகள் அடங்கிய மகஜரை தாசில்தார் இல்லாததால் ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடம் சமர்ப்பித்தனர். உடனே கவனிப்பதாகவும்,ஞாயிற்றுக்கிழமை வருவதாகவும் அவர் வாக்களித்தார்.

(ஜில்லா கலெக்டருக்குத் தந்தியும், அருப்புக்கோட்டை தாசில்தாருக்குத் தகவலும் அனுப்பப்பட்டது.)

#### இயக்கம் தோன்றிய விதம்

கடந்த வருஷக் கடைசியில் அடித்த புயலால் இப்பகுதி அதிகம் பாதித்தது. மனுக்கள் பைசலாவதில் காலதாமதமானது. கம்யூனிஸ்ட் பூச்சாண்டி காட்டி மனுக்கள் மறுக்கப்பட்டன. இதை எதிர்த்து தாலூகா பூராவும் கிளர்ச்சியும், பிரச்சாரமும் நடைபெற்றது. நோட்டீஸ் வெளியானது. தூதுகோஷ்டி சென்றது. கலெக்டர், ரெவின்யூ போர்டு மெம்பர் முதலியவர்களையும் சந்தித்தனர். சுயநலம் அம்பலப்படுத்தப்பட்டது. இறுதியாக லோன் வழங்க முன் வந்தனர். ஆனால் பரிசிலனை முடியுந் தருவாயில் ஜீவனும்ச லோன் நிறுத்தப்பட்டு விட்டது. இன்று வீட்டிற்கு லோனும் நிலச் சீர்திருத்த லோனும் கோரப்படுகிறது.

ஆவியூர் பிர்க்காவிலிருந்து ஏராளமான மனுக்கள் போடப்பட்டன. ஆவியூரிலிருந்து மட்டும் 230 மனுக்கள் போடப்பட்டு 32 மனுக்களுக்கே கடன் கிடைத்தது. மீத மனுக்கள் பைசல் செய்வதில் காலதாமதமும், சுயநலமும் தாண்டவமாடியதால் இந்த கால் நடை அணிவகுப்பு நடைபெற்றது. (ந. நி.)

# கோவில் நிலங்களில் உழுபவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டும்

## ஈரோடு தாலூகா விவசாயிகள் மகாநாட்டில் கோரிக்கை

ஈரோடு, செப்.—8

ஈரோடு தாலூகாவில் பிரபலமாக உள்ள அப்பச்சிமார் மடம் கோவிலுக்குச் சேர்ந்த நிலங்களில் உழுபவர்களுக்கு நில வெளியேற்றத்தினின்றும் பாதுகாப்புக் கொடுக்க இந்துமத பரிபாலன போர்டார் மூலம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொண்டு, கடந்த செப். 2-ந் தேதியன்று நடைபெற்ற ஈரோடு தாலூகா விவசாயிகள் மகாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மேற்படி கோவிலுக்கு கோவை ஜில்லாவின் பல பகுதிகளிலிருந்தும் ஆயிரக் கணக்கில் யாத்ரீகர்கள் வந்து போகிறார்கள். இதன் மூலம் வருஷா வருஷம் அந்தக் கோவிலுக்கு பதினாயிரக் கணக்கான ரூபாய்கள் வருமானம் கிடைக்கிறது. ஆயினும் கோவிலுக்கு வரும் யாத்ரீகர்களுக்கு நிர்வாகஸ்தர்கள், தேவையான வசதிகளை செய்து கொடுப்பதில்லை. மாறாக, கோயில் வருமானத்தை அவர்கள் சுயநலத்திற்கு உபயோகித்துக் கொள்ளும் சந்தர்ப்பம் இருக்கிறது. எனவே, இதை உடனடியாகத் தடுத்து, மேற்படி கோவில் நிர்வாகத்தை இந்துமத பரிபாலன போர்டின்கீழ் கொண்டுவர சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் அத்தீர்மானம் கோருகிறது.

### வெள்ளை முதலாளிகளை எதிர்த்து புதிய தொழிலாளர் சங்கம்

#### ஒன்றுபட்டு வெற்றி பல கண்டனர்

கோவை, செப். 8—

கோவைக்கு அருகில் உள்ள துடியலூரில் வெள்ளை முதலாளிகளின் டி. ஸ்டேன்ஸ் எருவு கம்பெனியில் புதிதாகத் தொழிலாளர் சங்கம் ஒன்று சென்ற மாதத்தில் அமைக்கப்பட்டது

சம்பள உயர்வும் அலவன்ஸ் உயர்வும் கோரி சங்கம் விடுத்த கோரிக்கை லேபர் ஆபீசர் முன் கன்சிலேஷனுக்காக வைக்கப்பட்டுள்ளது. (தற்பொழுது பெண் தொழிலாளிகளுக்குப் பஞ்சப்படி மாதம் ரூ. 20 ம் தினக்கூலி 0–7–9 ம், ஆண்களுக்கு பஞ்சப்படி மாதம் ரு. 35-ம், தினக்கூலி 0–14–0 மட்டுமே கிடைத்து வருகிறது.)

பேக்டரி சட்டப்படி கிடைக்க வேண்டிய உரிமைகளை முதலாளி மறுத்து வந்தார்.

தொழிற் சங்கம் நடவடிக்கை எடுத்த பின் 'ஓவர் டைம்' கூலி இரட்டிப்பு கொடுக்கப்படுகிறது.

மேலும், எந்த வித விசாரணையுமின்றி தொழிலாளிகளை வேலையை விட்டுத் தள்ளுவதும் நிறுத்தப்பட்டிருக்கிறது. (ந. நி)

### வேலை தேடித் தரும் காரியாலயங்கள் 256 ஆக அதிகரிக்கப்படுமாம்

புதுடெல்லி, செப். 5—

வேலையற்றோர்களைப் பதிவு செய்துகொண்டு வேலை தேடித் தரும் ஸ்தாபனங்கள் இப்பொழுது 137 இருக்கின்றன. இரண்டாவது திட்டத்தின்கீழ் இவை 256 ஆக அதிகரிக்கப்படும் என்று தொழில் மந்திரி இலாகா.வட்டாரங்களிலிருந்து தெரிய வருகிறது.

# ஏழைகள் வயிற்றிலே மண்!

## காந்தி நிகேதன் கைங்கரியம்

திருமங்கலம், செப். 5—

கல்லுப்பட்டி சாந்தி நிகேதன ஆஸ்ரம விஸ்தரிப்புக்காக, அதைச் சுற்றியுள்ள சில நிலங்களை குறைந்த நஷ்டஈடு கொடுத்து எடுத்துக்கொள்ளப் போவதாக ரெவ்னியூ டிவிஷனல் ஆபீஸர் அறிவித்துள்ளார். இந்த நிலங்களை பரம ஏழைகள் கிணற்றுத் தோட்டங்களாகப் பயிரிட்டு, பிழைத்து வருகின்றனர்.

இந்தப் பிழைப்பிலும் மண் போட வருவதை எதிர்த்து விவசாயிகள் பலமானக் கண்டனக்குரல் எழுப்பியுள்ளனர். ஒன்று, எடுத்துக்கொள்ளும் நிலங்களுக்குப் பதில், அதே அளவுள்ளத் தோட்டப் புஞ்சைகளை சர்க்கார் வாங்கித் தரவேண்டும். அல்லது இந்த நிலங்களை ஆக்கிரமிக்க விடமாட்டோம் என்று ரெவ்னியூ ஆபீஸரிடம் சென்ற 3-ம் தேதி விவசாயிகள் உறுதியாகத் தெரிவித்துவிட்டனர். (ந-நி.)

### இன ஒதுக்கல் சட்டத்திற்கு தலைமைப் பாதிரியார் கண்டனம்

ஜோஹனஸ்பர்க், செப், 4—

தென்னாப்பிரிக்க சர்க்கார் நிற வெறித் தாண்டவமாடி இன ஒதுக்கல் சட்டம் என்ற கொடுங்கோன்மைச் சட்டத்தால் ஆயிரக் கணக்கான இந்திய ஆப்பிரிக்க குடும்பங்களை கூண்டோடு வெளியேற்றி நகரைவிட்டுத் துரத்தக் கொண்டு வந்துள்ள ஒதுக்கல் சட்டத்தை ஆட்சேபித்து 'இது கொடுமை இது அநீதி' என்று தென் ஆப்பிரிக்கா ஜோஹனஸ்பர்க் நகர தலைமைப் பாதிரியார் ரெவ. அம்ப்ரோஸ் ரீவ்ஸ் ஓர் அறிக்கை விடுத்துள்ளார். இவ்வறிக்கையில் மிதவாதக் கட்சித் தலைவரும் நூலாசிரியருமான அலன் பாடனும் கையொப்பமிட்டுள்ளார்.

### சோஷலிஸ்ட் நாடுகளுடன் உறவு

#### இலங்கையின் முடிவுக்கு சோவியத் பத்திரிகை பாராட்டுகிறது

மாஸ்கோ, செப். 4—

சோவியத் யூனியன், சீனா, இதர சோஷலிஸ்ட் நாடுகளுடன் வர்த்தக உறவுகளை வளர்த்துக் கொள்ள இலங்கை சர்க்கார் செய்துள்ள முடிவைப் பாராட்டி சோவியத் பத்திரிகையான "இஸ்வெஸ்டியா" எழுதி யுள்ளது. மேலை நாடுகளுடன் மட்டும் வர்த்தக உறவு கொண்டு கட்டுப்பட்டிருந்தால் இலங்கையின் பொருளாதாரம் ஏகபோக முதலாளித்துவ ஆதிக்கத்திற்கு உட்பட்டுக் கிடக்க நேரும் என்பதை உணர்ந்தே இலங்கை இத்தகைய முடிவை எடுத்திருக்கிறது என்று குறிப்பிட்டுள்ளது.

எவ்வித அரசியல் பொருளாதார நிபந்தனைகளும் இன்றி பரஸ்பர நலனை மட்டுமே அடிப்படையாக்கிய இலங்கை – சீனா வர்த்தக உடன்பாடு நல்லதோர் உதாரணம். சோஷலிஸ்ட் நாடுகளின் பொருளாதார ஏற்றத்தையும் இது எடுத்துக் காட்டிவிட்டது.

### ஓர் திருத்தம்

ஜனசக்தி 23-வது இதழில் (சென்னை 6–9–56 வெளியூர் 7–9–56) 4ம் பக்கம் பாரதிதாசனின் விபரீதப்போக்கு என்ற தலைப்பின்கீழ், "முன்னர் மக்கள் முன்னணி அபேட்சகராக நின்ற வக்கில் ஜீவரத்தினம் இப்போது காங்கிரஸ் அபேட்சகராக நிற்கிறார்" என்று பிரசுரிக்கப்பட்டுள்ளது தவறு. தற்போது காங்கிரஸ் அபேட்சகராக நிற்பவர் காலஞ்சென்ற முத்துப் பிள்ளையின் மருமகன். இவர் வேறு. பாரதிதாசனும், வக்கில் ஜீவரத்தினமும் மக்கள் முன்னணியிலிருந்து நீக்கப்பட்டுள்ளனர். தவறுக்கு வருந்துகிறோம்.

Regd. No.M. 5934 — Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press, (Phone 2241) 32, Broadway, Madras-1. Editor: P. JEEVANANDAM

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON.